

குடியரசுத்தலைவர் மாளிகையில்
சங்க இலக்கியத் தொகுதி
வெளியீட்டு விழாவின் போது
நாச்சியப்ப சுவாமிகளுடன்
டாக்டர் ஏ.பி.ஜே. அப்துல்கலாம் அவர்கள்.

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

மன்மத - ஆவணி - 2015 - ஆகஸ்ட் இதழ் - [illegible]

சிறப்பாசிரியர் :
சீர் வளர் சீர்
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

### பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்

# இறை வணக்கம்

பிறைமதி சூடிய பெம்மான் நங்கள்
பிறவிநோய் போக்கும் துறவியர் தோழன்
பேர்பல வுடையன் பெருநதி கங்கை
பேணிய சடையன் பிஞ்ஞகன் என்றே

மறையறி வாணர் உரைபுகல் கின்ற
மன்றினன் தெய்வக் கொற்றவாள் ஈசன்
மங்கலப் பாண்டி வளநா டாள்வோன்
மாதவர்க் கிவனே நாயகன் என்பார்

கறைபொலி கண்டன் பால்வண மேனிக்
கண்ணுதல் இன்பக் கழனிநா டாள்வான்
காவலன் துணைவி கலைபொலி மாது
கவின்மிகு வன்னி வனமுறை கன்னி

நறைபொலி கமல நன்மலர் சூடும்
நாயகி எங்கள் திருநெல்லை அன்னை
நற்பதம் தொழுவோர் அற்புதம் காண்பர்
நங்கையின் பாதம் நாளெலாம் தொழுமின்

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்

# ஆசிக்கவிதை

## சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்

ஆடிப்பட்டம் தேடிவிதை உழவர்க்காக
ஆடிப்பூரம் அதிசிறப்பிற்குரியது விழாக்கோலம்
அம்மைக்கு விழாஎடுத்து அகம்மகிழும் காலம் இது
செம்மைத் தமிழுக்கும் இடம் அளிக்கும் தருணம் இது

ஆடிப் பூரச் சிறப்புக் கவியரங்கம்
தேடிக் கேட்க வந்துள்ள சிறந்தோரே
பாடிக் களிக்க வந்துள்ள பாவலரே
நாடிக் கேட்கும் நல்லோரே சிறந்தோரே
உள்ளம் நிறை அன்புடனே உமக்குரைத்தேன் ஆசிகளை
எல்லாம் நிறை வாழ்வுதனைப் பெற்றுயர வாழ்த்துகிறேன்

எனக்குப் பிறப்பீந்தார் அழகம்மை மெய்யப்பர்
எனக்கருள் ஈந்தார் கற்பகக் கணபதி
எனக்கொளி தந்தவர் கந்தனும் நாச்சியப்பரும் (இறைவனும் சற்குருவும்)
எனக்கார்வம் தந்தவர் கம்பனும் வள்ளுவரும்
எனக்குத்தமிழ் தந்தவர்கள் கணேசனும் சம்பந்தனும்
எனக்குக் கவியீந்தார் கண்ணனும் யோகியும்
எனக்குச் சிறப்பீந்தது திருநெல்லை திருமடமே
அனைவர்க்கும் வணக்கமுடன் நன்றி சொல்வேன் நான்
நினைத்தற் கரிய இடம்பெற்றது முன்வினைப் பயனே
முறையாகக் கற்றதில்லை தமிழும் தளையும்
சரியாகப் புரிந்ததில்லை இலக்கணமும் சீர்வகையும்
இருந்தாலும் எழுதினேன் கவி இருந்ததனைக் கொண்டு
இருந்தன எனக்குள்ளே உணர்ச்சியும் ஆர்வமுமே
சிறந்தன சிலவுண்டு சில்லறையே மற்றவை
மறந்தும் எனைக் கவியென நான் நினைத்ததில்லை
கட்டாயக் கவிதைகள் பலவாக எழுதியதுண்டு
கொட்டும் மழையாகக் கவிஎழுதத் தெரியாது
இன்றைக்கு இவ்வரங்கில் இன்கவிதை பாடவுள்ள
தண்டமிழ்ப் பாவலர்களே தமிழினிய ஆர்வலர்களே

ஐம்பூதம் பற்றிக்கவி அருமையாக உரைப்பார்கள்
உம்மனம் மகிழ்ந்து இனிக்க உண்டு ரசிப்பீர்களே!
உம்மென்றால் ஒரு நூறு இம்மென்றால் இருநூறு
தம் கவியால் தரவல்லார் தமிழ் ஆசான் மீனவன்
காப்பியக் கவிஞர் காவலர் நற்றமிழ்க்கே
பாப்படைக்கப் பிறந்தவர் பாடுதமிழ் வளர்ப்பவர்
என்றைக்கும் இனிய கவி அவர்பாட நம் ஆசி.
நின்று நிலைக்க அவர்கவிக்கும் நல் ஆசி வழங்குகிறோமே!

### வானம்

இறைவனைப் போலே எங்கும் நிறைந்தது
குறையொன்றும் இல்லாக் குணம் நிறை வானம்
அலையும் காற்றும் அனலுடன் நீரும்
நிலமும் நிறைந்திடத் தாங்குவது வானம்
மற்றை நான்கும் தோன்றிடக் கருவாகி
உற்றது வானம் உயர்ந்தது வானம்
உருவும் மருவும் அற்றது வானம்
விரிவும் ஓசையும் உடையது வானம்
வானம் பாடும் வானம் பாடி நல்ல
கானம் பாடும் இசைக்குயில் புலவர்
சேணம் மிகு தமிழில் மெய்யாண்டவர் கவிபாடி
வேணும் எல்லோர்க்கும் விருந்து படைப்பாரே.

### காற்று

வானத்தின் முதற்குழந்தை வளியெனும் காற்று
மோனத் தவம்கலைக்கும் மோகத்தீ மூட்டும்
ஓரிடம் நில்லாது ஓரிடமும் தங்காது
சேரிடம் குழப்பம் சிறக்கவே செய்யும்
கானம் பரப்பும் கடலைப் புயலாக்கும்
அலைவே குணமாகி அமைதிக்கே எதிராகி
அலைகின்ற காற்றை அழகு தமிழில் பாடுகிறார்
எங்கள் பேராசிரியர் அம்மை கண்ணாத்தாள்
தங்கக் கவி தருவார் தழைக்கட்டும் அவர்கவியே!

### தீ

வானத்தின் பேரக் குழந்தை வையகம் ஒளிபெறவே

கானகத்தில் காற்றில் தோன்றிய கனல் இது
வெப்பமும் ஒளியும் வேண்டும் உலகிற்கே
ஆக்கவும் அழிக்கவும் அளவில்லாத் திறங்கொண்ட
பார்க்கவும் படிக்கவும் பயன்படும் அக்னியை
செப்பமுடன் பொருளெல்லாம் தெளிவாக்கும் சிறப்பிதற்கே
வெம்மை மிகு தீ பற்றி வெல் கவிதை படைக்கின்றார்
செம்மை மிகு தமிழ் ஆசான் சீர் சொல் நாகப்பன்
அமுதக் கவி பாடட்டும் அன்பர் கா. நாகப்பன்

**நீர்**

வானத்தின் கொள்ளுப் பேரன் வெந்தீயின் திருமகன்
வானத்தின் வளந்தன்னை வையகத்தே சேர்க்கின்ற
எல்லாக் கலத்தும் இருக்கின்ற தேவைகள்
நல்ல நீரும்காற்றும் நானிலத்தே வேண்டும்தான்
அள்ளிச் சேர்க்கவும் தள்ளிக் கழுவவும்
எல்லையற்ற இணையிலா ஆற்றல்பெரு தெள் நீரே!
நேரில்லா வள்ளுவர்முதல் நேயங்கொள் புலவர் பலர்
நீரின் வளத்தை நிறையவே பாடியுள்ளார்
இங்கிவ் வரங்கிலதனை இனிய கவியாக்கி
நம்கவிதை பரம்பரையில் நற்கவிஞர் கஸ்தூரி
சிலர் கவிதை அவர் பாடச் செவிமடுப்பீர் அன்பர்களே!

**நிலம்**

வானத்தின் கொள்ளுப் பேத்தி வண்நீரின் வளம் திருமகள்
கானம் கடல் நிலம் என்றே கடினமனம் நிறைந்தவள்
வளமொடு குறையும் வாசமொடு நாற்றமும்
நலமோடு தீமையும் நானா வகையில்
கவலை களிப்பென வாழும்உயிர் அனைத்தும்
தாங்கும் இப்பூமி தன்குணத்தைக் கவியரங்கில்
பொங்குதமிழிற் புகல உள்ளார் பொற்புடைய ராமனாதன்
அந்தக் கவிகேட்டு அன்பர்கள் இன்புறுக
சந்தக் கவிகேட்டுச் செந்தமிழ் இன்புறுகவே!

***ஆசிர்வாதங்கள் !!***

(13.08.2015 அன்று மடாலய வளாகத்தில் நடைபெற்ற
கவியரங்கில் சுவாமிகள் வாசித்த ஆசிக்கவிதை இது).

# மடாலய நிகழ்வுகள்

3.8.2015 அன்று அரு.சா. நாராயணசுவாமி ஐயா குருபூஜையும் 5.8.2015 அன்று காளையார்கோவில் செல்லப்பசுவாமிகள் குருபூஜையும் 9.8.2015 அன்று ஸ்ரீமத் கருணாநிதிசுவாமிகள் (3ஆவது பட்டம்) குருபூஜையும் 15.8.2015 அன்று நேமத்தான்பட்டி பழனியப்பஅய்யா குருபூஜையும் 16.8.2015 அன்று ஸ்ரீமத் துறவுஆண்டவர் (2ஆவது பட்டம்) குருபூஜையும் மிகச் சிறப்பாக நடந்தன.

12.8.2015 அன்று நாச்சியப்பசுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரியிலும் 13.8.2015 அன்று உடற்பயிற்சிக் கல்லூரியிலும் இரத்ததான முகாம் நடைபெற்றது.

7.8.2015 முதல் 19.8.2015 வரை ஆடிப்பூரத் திருவிழா மிகச்சிறப்பாக நடந்தது. திருவிழாவை முன்னிட்டு 13.8.2015 அன்று காப்பியக் கவிஞர் நா. மீன்வன் தலைமையில் ஐம்பெரும் பூதங்கள் என்னும் தலைப்பில் கவியரங்கம் மடாலய வளாகத்தில் நடைபெற்றது. சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் முன்னிலை வகித்து ஆசிக் கவிதை வழங்கினார். சந்தக் கவிஞர் எம்.எஸ். இராமநாதன் நிலம் என்ற தலைப்பிலும் தேசியக் கவிஞர் குழிபிறை வி.கே. கஸ்தூரிநாதன் நீர் என்ற தலைப்பிலும் பொற்கிழிக் கவிஞர் கா. நாகப்பன் நெருப்பு என்னும் தலைப்பிலும் டாக்டர் கே. கண்ணாத்தாள் காற்று என்னும் தலைப்பிலும் புலவர் மெய்யாண்டவர் வான் என்ற தலைப்பிலும் கவிதை பாடிச் சிறப்பித்தனர். பேராசிரியர் ம. கார்மேகம் நன்றிக் கவிதை வாசிக்க விழா இனிதே நிறைவுற்றது.

14.8.2015 அன்று ஆய்வுமாமணி பேராசிரியர் நா. சுப்பிரமணியன் தலைமையில் இனிமையான வாழ்க்கைச் சூழலுக்குப் பெரிதும் தேவை படிப்பறிவா? பட்டறிவா? என்னும் தலைப்பில் பட்டிமன்றம் நடைபெற்றது. கோவிலூர் சுவாமிகளின் ஆசியுரையுடன் நடைபெற்ற பட்டிமன்றத்தில் படிப்பறிவே என்ற

அணியில் முனைவர் மு. பழனியப்பன், கவிஞர் நீ. இரவிச்சந்திரன், கவிஞர் மெ. ஜெயங்கொண்டான் ஆகியோரும் பட்டறிவே என்னும் அணியில் முனைவர் மா. சிதம்பரம், முனைவர் செ. நாகநாதன், கவிஞர் பழ. பாஸ்கரன் ஆகியோரும் வாதிட்டனர். முன்னதாக, ம. கார்மேகம் வரவேற்புரை வழங்கியதோடு நிறைவாக நன்றியுரையும் வழங்கினார்.

15.8.2015 அன்று கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக்குலேசன் மேல்நிலைப் பள்ளி வளாகத்தில் சனாதனதர்ம உலகப் பல்கலைக்கழகக் கல்வி நிறுவனங்களின் சார்பில் சுதந்திரதின விழா நடைபெற்றது. காரைக்குடி, இராமசாமி தமிழ்க் கல்லூரியின் முன்னாள் முதல்வர் பேராசிரியர் திருமதி.டாக்டர் நா. வள்ளி கொடியேற்றி வைத்துச் சிறப்புரை நிகழ்த்தினார். கோவிலூர் ஆதின சுவாமிகள் ஆசியுரை வழங்கினார். திருமதி மணிமொழிமோகன் வரவேற்புரை வழங்கினார். முத்துராமலிங்க ஆண்டவர் நர்சரி மற்றும் பிரைமரி பள்ளியின் தலைமை ஆசிரியை திருமதி மணிமொழி நன்றியுரை கூற விழா நிறைவுற்றது. மறைந்த குடியரசுத் தலைவர் ஏ.பி.ஜே. அப்துல்கலாம் அவர்களின் நினைவாக நடத்தப்பெற்ற பேச்சுப் போட்டிகளில் வெற்றிபெற்ற மாணவர்களுக்குப் பரிசுகள் வழங்கப்பெற்றன. மாணவர்களின் கலைநிகழ்ச்சிகளும் நிகழ்ந்தன.

## கோயிலூர்ப் புராணம் (தொடர்ச்சி)

### (உபநிடதப் பொருளுரைத்த படலம்)

ஆயிடின்அப் பரமசிவ சொரூபத்தை என்றும்
அறியார்கொல் ஒருவரும்என்(று) எண்ணுதியேல் கேள்நீ
மாஇருஞா லத்(து)எப்போ(து) எப்புருடன் அனேக
சன்மம்மரு விய பெரும்புண் ணியபரிபா கத்தான்
மீஉயரும் சித்தசுத்தி உண்டாகி விடய
இரத்தனாய் முத்திஇச்சா தீவிரம்உள் ளவனாய்ப்
பாயவெளி முகமாம்இந் திரியவசன் ஆகாப்
பண்பினனாய் நதிஎதிர்ந்து நீந்துவான் போன்று 61

பரமகா தீரனாய் உள்முகம் ஆகின்றான்
பரி(வு)உறும்அப் போ(து)அனையன் சருவவியா பகமாய்
விரவுபிரத் தியகபின்னசிவ சொரூபத்தை
விளங்கஅகங் கையின்ஒளிரும் ஆமலகக் கனிபோல்
உரவுமிகு பிரதிபந்தம் ஒன்றேனும் இன்றி
உணருவன்ஈ(து) உண்மைஇது மாதவத்து முனிவா
கரவுதவிர் தர(வு)இவ்வா(று) உணர்ந்(து)ஒளிரும் ஒருவன்
காட்சிஅனு பவம்ஏதோ என்றிடில்சொல் லுவன்கேள் 62

சிருட்டிதிதி சங்கார கருத்தர் ஆகியும்அச்
சிருட்டிதிதி சங்காரம் அடைந்தசகத் தாயும்
இருட்(டு)அமையும் மற்(று)உள(து)எவ் விதத்தோற்றம் ஆயும்
இருக்கின்ற சீவேசகத்(து) அனைத்தும் இனிய
பொருள்திறம்சார் தரும்அகண்ட சச்சிதா நந்த
பூரணநல் பரமாத்தும விதம்ஆகி விளங்கும்
வெருள்திறன்இல் பரசிவசொரூ பம்என்றே தோன்றல்
விளங்கும்அனு பவம்வே(று)இன்(று) உண்மைஇது
முனியே 63

இத்தகைய பரசிவசொ ரூபத்தை முத்தி
இச்சைஉடைய வன்அறிதற்(கு) உபாயம்ஏ(து) என்னின்
ஒத்தமையும் ஆன்மாவே நாயகனாப் புத்தி
ஓட்டுசா ரதியாக மனம்கலினம் ஆக
வைத்திடும்இந் தியங்களே பரியாக அமைந்து
மருவும்உடல் ஆம்தேர்அவ் இந்திரியப் பரியால்
மொய்த்தபல விடயம்எனும் வனபூமி இடத்து
முன்னுபுசஞ் சரித்திடலால் முத்திஇச்சை உடையோன் 64

ஞானசாத் திரசன்ம விவேகபுத்தி ஆய
நல்லசா ரதியால்அவ் விடயவன பூமி
ஆனதில்செல் லாநின்ற இந்திரியப் பரியை
ஆன்மபூமி யில்திருப்பி நிரந்தரம் நன்(கு)அமைய
மோனம்மிகும் ஆன்மநிட்டை அடைவதே முன்னம்
மொழிந்தசிவ ரூபத்தை உணரும் உபா யங்காண்
மானம்இல் அப் பரசிவசொ ரூபம் ஏது என்னின்
வகுத்துரைப்பன் கேட்டிதவ மாண்புசால் முனியே 65

தோற்றுசுயம் பிரகாச சித்(து) உருவே அதன்தன்
சொரூபம்அஃ(து) எவ் இடத்(து)எவ் விதம்இருக்கும் என்னில்
ஏற்றம் இஃ(து)எல் லாப்பூ தங்களி டத்தினிலும்
எல்லோர்க்கும் உள்ஆன்மா வாய்இருக்கும் உணர்தி
போற்(று)அஃ(து) இப் படிஇருந்தால் எல்லோர்க்கும் என்னோ
தோற்றவிலை எனில்புகறும் பொலிந்தசூக் குமமாய்
மாற்றிரிய பஞ்சகோ சங்களால் என்றும்
மறைக்கப்பட்(டு) இருத்தலால் தோற்றவிலை உணரே 66

ஆயின்அது பரிச்சின்ன மோஎனநீ கருதில்
ஆகாசம் போல்எங்கும் வியாபிகாண் அதனால்
மேயபரிச் சின்னம்அல இச்சொரூ பந்தான்
விளங்குதிரி மூர்த்திகளுள் ஒன்றோஎன்(று) எண்ணில்
பாயபல கருமபலம் கொடுப்பதாய்ச் சருவ
பூதஅதிட் டானமாய்ப் பகர்சருவ சான்றாய்
ஏயசித்து ரூபமாய் அத்துவிதம் ஆயும்
இருக்கின்ற பிரமம்ஆ னதாலென்றும் அன்றே 67

பூன்றஅதன் சொரூபம்தான் பின்னைஎவ்வா(று) என்னில்
புகல்அவித்தை மாயைஎனும் உபாதிகள்ஒன்(று) இன்றிச்
சான்றதத் துவபத இலக் கியத்தின் அருத் தம்அதாய்ச்
சாற்றிரிய கேவலமாய்த் தவிர்அருநிர்க் குணமாய்
ஆன்றநித்த சுத்தபுத்த முத்தமாய் இருக்கும்
அகண்டசிதா காசேம பரசிவசொ ரூபம்
ஊன்றஒளிர் சிசொரூ பத்தைஇனி(து)உணர்ந்தோர்க்(கு)
உற்றபிர யோசனம்யா(து) எனில் உரைப்பாம் தெளிமோ 68

அகண்டபர சிவத்தினது சொரூபமேநான் என்ற
அதிகாரி யாம்ஒருவன் பிரதிபந்தம் இன்றிப்
புகன்றஅப ரோட்சமாய் அறியானோ அவற்குப்
போத்தாபோக் கியம்போக திரிபுடிஇன் மையினால்
சுகந்தகயா வையும்கண்ட பரசிவம்ஆ கியதன்
சொரூபம்எனத் தோற்றலால் தோற்றம்உடைத்(து) ஆகி
நிகழ்ந்தபல சரீரதா பமும்இயல்பே நீங்கி
நிரதிசயா நந்தம் அடை வதுபிரயோ சனமே 69

அன்றியும்கேள் பிரத்தியக பின்னமே ஆன
அப்பரம சிவசொரூ பம்தான் ஆக உணர்ந்தால்
ஒன்றியஆன் மாவுக்கும்அகங் காரத் தினுக்கும்
ஒன்றும்அத்தி யாசம்ஆகிய இதய கிரந்தி
வென்றிஉற நீங்குவதும் வேதார்த்தம் தான்று
விதமோஅத் துவிதமோ அத்துவிதம் எனினும்
என்றும் அஃ(து)அனுபவிக்க வருமோவா ராதோ
எனும்இவைமுன் சகலசந்தே கங்கள்நீங் குவதும் 70

சஞ்சிதமே பிராரத்த மேஆகாயமே
எனும்கருமம் தணப்பதுவும் தருபிரயோ சனமா
எஞ்சல்இலாப் பிரத்தியக்க மாய்நானா விதமாய்
இயைநாம ரூபமாய்த் தோற்றிஇருக் கின்ற
விஞ்சுதுவி தப்பவஞ்சம் முழுமையும் கண்ட
மெய்அறி(வு)ஆ நந்தபூ ரண பரமாத் துவித
வஞ்சம்இலாப் பரமசிவ சொரூபம்ஆ கின்ற(து)
எவ்விதம்என் றிடில்வகுப்பாம் மாமுனிவ கேட்டி 71

பரவும்உபா தானகா ரணம்ஆய மண்ணே
பலவிதகும் பாதிகா ரியம்ஆதல் போலும்
விரவும்அதிட் டானம்ஆ கியகயிறே தண்ட
வியாளம்முதல் ஆரோபமாய்த் தோன்றல் போலும்
உரவுஎவைக்கும் உபாதான காரணமாம் எவைக்கும்
உற்றஅதிட் டானமாய் ஒளிரும்ஒரு சிவமே
அருள்தேவ திரியக்கு மனுடாதி ரூபம்
ஆம்நாம ரூபசகத் தாய்த்தோன்ற அதனால் 72

கரவுஇல்விசா ரத்துஉறுவகும் பாதிகாரி யங்கள்
காரணம்ஆ கியமண்ணே ஆகின்றால் போலும்
மரஅலங்கல் தண்டம்முதல் ஆகியஆ ரோபம்
அதிட்டான மாம்கயிறே ஆகின்றால் போலும்
விரவுசீ வேசசகத் தாய்த்தோன்று நானா
விதநாம ரூபசகத்(து) என்பதுவும் அகண்ட
பரவுபரி பூரண சச்சிதாநந்த சுத்த
பரமாத்து விதபரம சிவசொரூப மேயாம் 73

இவ்வாறு பரமார்த்தத் தில்சகல சகத்தும்
இலங்குஅகண்ட சிதாகாச சிவமேயாய் இருந்தும்
செவ்வாய்மை இஃ(து)உணரார்க்(கு) அந்தகர்க்குப் பகலில்
செங்கதிரால் விளங்குசகம் இருளாய்த்தோற் றுதல்போல்
ஒவ்வாத அகண்டபர மாத்துவிதம் ஆன
ஒருசுத்த பரசிவசொ ரூபமே எவரும்
தெவ்வாத சீவேசசகத்(து)ஆன துவிதத்
திறம்போலத் தோன்றும்இதற்(கு) என்செயலாம் முனியே 74

மேயஅவி வேகதிட்டி யில்பரமே நானா
விதசரீ ராதிகளாய்த் தோன்றினபோ தினுமேல்
ஆயசெயல் மலிதருவி வேகியான்அவன் தான்
அநித்தம்ஆ கியஉடம்பு முதலியஎன்(று) உரைக்கும்
நேயநானாவிதஉ பாதிகளை நேதி
நேதிஎனும் வாக்கின்அப வாதத்தால் கெஞ்சும்
பாயபூ ரணசிவம்தான் என்றஅபரோட் சமதாய்ப்
படர்ந்(து)உணரில் சோகம்அற்றுப் பரமாய்எஞ் சுவனே 75

அப்பரம சிவம்சருவ பூரணம்ஆ கையினால்
அஞ்ஞானத் துடனும்அதன் காரியத்தின் உடனும்
வெப்பகல்சம் பந்தம்உறு மோஎனில் சொரூபம்
வெளிபோல் நிட்கிரிய நிரவய நிற்குணமாய்
ஒப்பில்அவி காரநிரு மலஅசங்க மாய்நன்(கு)
உறைதலின்அஞ் ஞானத்தின் அதன்காரி யத்தில்
திப்பியமாக் கூடியபோ தினும்அவைக ளுடனே
சேர்தருசம் பந்தம்இலை எஞ்ஞான்றும் உணரே 76

புகல்அரிய சிவசொரூபம் எப்படிக்காண் சருவ
பூரணம்என் றிடில்விடயம் வியாபகமாம் அவற்றில்
உகல்அரிய இந்திரியம் வியாபகமாம் அவற்றின்
உற்றமனம் வியாபகமாம் அத்தகைய மனத்தின்
அகல்அரிய புத்திவியா பகம்ஆகும் விசேட
அகங்காரம் அதனினும்வி யாபகம்அ தனினும்
நகல்அரிய தாம்சாமா னியஅகங்கா ரம்தான்
ஆடுவியா பகமாகும் அதனினும்மா முனியே 77

அறிவுடையோர் அவ்வியத்தம் என்(று)உரைக்கப் பட்ட
அஞ்ஞானம் வியாபகமாம் மறைந்தஅது தனிலும்
குறிகுணம்இல் பரசிவசொ ரூபம்வியா பகமாம்
கூறியஅப் பரசிவசொ ரூபத்தின் மேலாம்
நெறிதருவி யாபகமாம் யா(து)ஒன்றும் இல்லை
நீஉணர்தி ஆகையால் சொரூபமே என்றும்
செறிதருநல் தவமுனிவா சருவபூ ரணமாம்
தேருமறை முடிவெடுத்துச் செப்புவ(து)இப் படியே 78

உரைசெயும்இத் தகையசிவ சொரூபம்தன் வடிவாய்
உணராமல் வேறுபடுத்(து) உணர்பவர்க்(கு)எஞ் ஞான்றும்
புரைசெய்சமு சாரம்மோ காதிபயம் நீங்கா
பூரணசச் சிதாநந்த சொரூபமே எல்லாம்
கரைசெய்அது வேநான்என்(று) அறிந்தவனுக்(கு) என்றும்
கலங்கவரு சோகம்மோ காதிபயம் இல்லை
வரைசெய்மறை முடிவான பொருள்இதுமற்(று) இதுதான்
மாண்டநின்போல் வார்க்(கு)அன்றி மற்(று)ஒருவர்க்(கு) அரிதே 79

விரவுநால் சாதனசம் பன்னஅதி காரி
விளங்கியஇப் பிரமவித்தை யினைக்குரவன் முகமாப்
பரவுசிர வணம்செய்து நன்றாக உணர்ந்து
பகர்சுருதிக்(கு) அனுகூல மானஉத்தி கொண்டு
கரவுதவிர் தரமனனம் பண்ணியபின் இவற்றால்
கருத்(து)உறநிச் சயித்தபடி சொரூபன்நான் என்றே
உரவுமிகுதல் இலதா இரையின் இடைவிடாதே
உஞற்(று)அகச் சாதனமான நிதித்தியா சனத்தால் 80

மிக்கசிவ சொரூபத்தை அறியாமை ஐயம்
விபரீதம் கடந்துகர தலநெல்லிக் கனிபோல்
தக்கஅப ரோட்சமாய் அறியலா மறைகள்
சாற்றியநிர்க் குணசிவசொ ரூபஞானத்திற்(கு)
எக்கலையும் கற்(று)உணர்ந்தோய் சகலபர சிவத்தின்
இருமலர்த்தாள் உபாசனையே சாதனம்ஆ னதுகாண்
பொக்கம்மிளிர்க் குள்சிவஞா னம்பொலியும் அளவும்
புகல்அரும்பேர் இன்பமுத்தி வாஞ்சைஉடை வன்தாள் 81

பத்தியுடன் திருநீறு பூசியுருத் திராக்கம்
பண்புமிகப் பூண்(டு)எழுத்(து)ஓர் ஐந்தினையும் கணித்துச்
சித்திதரு சகுணபர சிவனுடைய பூசை
தியாந்தோத் திரம்ஆதி உபாசனைசெய் திடலே
முத்திநெறி என்றுமலர்த் தவி(சு)உறைவோன் வேத
முடிவான பிரமவித்தை மதுப்பிரியற்(கு) அருளி
எத்திசையும் தொழுதேத்தும் திரிபுவனே சன்தாள்
இறைஞ்சிவிடை கொண்டுதன(து) உலகம்அடைந் தனனே 82

மறையவன்நீங் குதலும்மதுப் பிரியமுனி உவகை
மடுத்(து)ஒளிர்வெண் ணீறுபுனைந்(து) அக்கமணி பூண்டு
கறைஅறஐந்(து) எழுத்துநனி சிரத்தைஉறக் கணித்துக்
காட்சிஉறு சகம்அனைத்தும் அகண்டபர சிவமே
நிறைதரும்அவ் அகண்டபர சிவமேநான் என்று
நிதித்தியா சனம்செய்து கொண்டிருக்கும் போது
பிறை அணி சச்சிதாநந்த சருவவல பத்தப்
பிரியபூ ரணஅள(வு)இல் கருணையுடைப் பெருமான் 83

கோடிசூ ரியகாந்தி உடையோனாய் அமரர்
கொண்டல்ஊர் பவன்அயன்மால் முதல்தேவர் சூழ
நீடியநால் வேதமும்நால் சிகரமா நடுவண்
நிகழ்சிகரம் விளங்கும்ஒரு பிரணவமாப் பொலிந்த
நாடியபஞ் சாக்கரவி மானத்துள் தோன்றி
நலங்கொள்மகா கைலாயம் நின்றுமெழுந்(து) அருளிப்
பாடியசீர்ச் சமிவனத்தின் மதுப்பிரிய முனிமுன்
பரையினொடு காட்சிகொடுத் தனன் உல(கு)உய் தரவே 84

கண்டமதுப் பிரியமுனி கரசரணம் விதிர்ப்பக்
கடி(து)எழுந்து கைகள்தலை மேல்குவித்து நிலமேல்
தண்டம்எனப் பணிந்(து)பணிந்(து) எழுந்(து)எதிரே நின்று
சச்சிதா நந்தபரி பூரணனாய்ச் சருவ
அண்டசரா சரம்அனைத்தும் மாயவனாய் மலரோன்
ஆதியரால் உபாசிக்கப் பட்டவனாய் அடியார்
கொண்டதுயர் ஒழிப்பவனாய் உள்ளபர சிவனைக்
குட ந்தம்உற்று நாத்தழும்பத் துதித்திடலுற் றனனே 85

*(தொடரும்....)*

## கோவிலூர் ஆண்டவர் அருளிய சுபாநுவத் திருவாக்கு (தொடர்ச்சி)

(சாது மெய்யப்ப ராமசுவாமி, கோவிலூர் மடாலயம்)

**உலகியல் துன்பம்**

உலகில் பிறந்துள்ளதால், நாம் உலகியலுக்கு ஆளாகிறோம். உடலே நான் எனல்; புலன்களின் செயல்கள்; மனகாரணமான எண்ணங்கள், ஆசை மற்றும் பற்று; மற்றோர் உறவும் பாசமும் என நாம் காண்பனவும் அனுபவிப்பனவுமே வாழ்க்கையாகிறது. வாழ்க்கையில் நாம் இன்ப - துன்ப அனுபவங்கள் பெறுகிறோம். தொடக்கத்தில் இன்பமாக அறியப்பட்ட பற்பல அனுபவங்களும் கூட துன்பமாகவே முடிகின்றன. துன்பங்களால் அல்லலுற்றவர்கள் வெறுப்படைவதும் உண்டு.

இவை எல்லாமே காணப்படுவன (திருசியம்) என அத்வைதம் கூறும். மேலும், திருசியமே துன்பகாரணம் எனவும் வலியுறுத்தும்.

உலகியல் துன்பங்கள் பற்றிய ஆண்டவரது பார்வையாவது (பாடல்களுக்கான மேற்கோள் அமைப்பு : 1. பா எண், 2. உட்பகுதி, 3. பக்கம், எ.கா: செய்யுள் 124 - 2 கந்தலிங்க ஞானதேசிகர் வணக்கம் - பக்கம் 78),

**I உடல் துன்பம்:**

1. **“அன்னை உதரத்து இடையே அழுந்தும் துன்பம்**
   **அது நீங்கிப் பிறக்கும்போது அழுந்தும் துன்பம்**
   **பின்னும்உடல் பிணியதனால் வருந்தும் துன்பம்**
   **பேதமதி அதனாலே பிறக்கும் துன்பம்**
   **மின்னஉடல் இறக்கும்போது அழுந்தும் துன்பம்**
   **இத்தனையும் நீங்க எனக்கு என்னோ என்னோ........”**

(124 - 2 கந்த தேசிக வணக்கம் - 78)

2. **“கூடாது என்னால் இந்தக் கூட்டில் இருக்கவும் தெய்வமே - இந்தப்**
   **பாடு படுவது பார்த்திலையோ பர தெய்வமே.”**

(19- தெய்வமே என்னும் கண்ணி - 132)

கருத்து: நான் பிறப்பதற்கு முன்பிருந்தே துன்பம் தொடங்கியது என் உடல் மற்றும் மனம் சார்ந்து துன்பம் தொடர்கிறது. இறப்பிலும் கூட துன்புறப்போகிறேன். இத்தகைய பாடு நீங்குதற்குத் தெய்வமே அருள வேண்டும்.

II செயல் துன்பம்:

"செய்ததுவே செய்யத் தினம் துணிந்து செல்வதுவே
உய்யும் வழிஎன்று ஒருப்பட்டாய் நெஞ்சகமே."

(49- நெஞ்சோடு இரங்கல் - 121)

கருத்து: பயனாசைச் செயல்கள் (காம்ய கர்மா) உய்வுக்கு உதவமாட்டா.

III மனத் துனபம்:

1. "இன்னல் உறும் உடல் இருக்க எண்ணும்எணம் போதும்
இருநான்கு சித்திகளில் இச்சைவைத்தல் போதும்
நன்னயமாம் சோதிடத்தில் நாட்டம்இனிப் போதும்
நல்இரும்பு பொன்னாக்கும் நசையதுவும் போதும்
பின்னம்உறும் வைத்தியத்தைப் பெறும்ஆசை போதும்
பேதம்உறும் இவைமுதலாம் பிராந்தியினை விட்டு....."

(27- திருநெல்லை வணக்கம் -20)

(இருநான்குசித்தி = அட்டமா சித்திகள், நசை = விருப்பம், பிராந்தி = மயக்கம்)

2. "......சீருடைய வேதத்தை ஆராய அஞ்சும் அது
தீரர்கள் நடப்பது எல்லாம்
சிறுமைஎன எண்ணியே தன்னுடைய தொழிலையே
திரமாக எண்ணி நாடிப்
பேர்பெரியர் என்னும், நம் சீர்பெரியது என்னும், நம்
பேராத வாழ்வு அது என்னும்;
பெண்ணில் ஒரு மடிகைப் பிள்ளைஎனும் ரூபமாய்ப்
பிரித்து அறிகில் இல்லையாகும்,
நேரான அகிலத்தில் உறைகின்ற சீவர்களை
நிலையாது அசைத்துவிட்டு,

நீநான் எனப்பேசி, ஆனாத துன்பமதில்
நிமிடத்து அழுத்துவிக்கும்
ஆரோ இதற்கு இந்த அறியாய அதிகாரம்
அளித்திட்டு அகன்றது அந்தோ......"

(71- விஷ்ணு வணக்கம் - 43)

**கருத்து:** ஆசை வயப்பட்ட மனம் பலவாறாக அலையும். சீருடையதைச் சிறுமையாகவும், தன் எண்ணத்தையே வலியுறுத்தியும், தேவையற்ற இரட்டைகளைத் (துவிதம்) புகுத்தித் துன்புறுத்தும். இதனை அறிய முற்படுகையில், மனம் எனும் சொல் உண்டு, ஆனால் அதற்குரிய பொருள் இல்லை (மலடியின் பிள்ளை போல) என ஆகும். ஆனால், மனதால் அடையப்பெற்ற துன்பம் பொய்யல்ல.

IV பொருளாசை, பெண்ணாசை, எனும் பற்றுத் துன்பம்

1. "மானம் உற்றுவரு தாரம் மக்கள்மனை
மாடு நித்தமென எண்ணியே
மாளு சித்தம்உறை தீனம் உற்றமடம்
மாய்வது எப்பகல் அறிந்திலேன்........."

(128- குருவணக்கம் -81)

2. "....கண்கெட்ட பகடுஆகி, அனவரதம் மாதருடைக்
காலிடைகள் தேடிநைந்தும்
வெண்டிங்கள் வதனம்உடை மின்னார்கள் சொன்னபடி
விலகாது செய்து நின்றும்,
வெகுகாலம் இந்தவிதம் வீணாள் கழிக்கின்ற
வினையேனை ஆள்வது என்றோ?..........."

(73- விஷ்ணு வணக்கம் -45)

**கருத்து:** மனைவி, மக்கள், வீடு, செல்வம் ஆகியவற்றை நிலையானவை எனக் கருதுதல் துன்பமாகும். இவற்றைப் பெற வாழ்நாளைக் கழித்தவர், அவை வீணாள் என அறிவதும் துன்பமே. ஆசை காரணமாகப் பற்றும் பற்றுக் காரணமாகத் துன்பமும் உண்டாகின்றன.

V உறவும் பாசமும் துன்பமே:

1. "தாரார்கள் ஓர்கணம், தருகடிகை தள்ளார்கள்
சந்ததமும் வந்த பிணியைச்
சலியாது வாங்கி அனு பவியார்கள் எந்தன்உயிர்
தனுவிட்டு அகன்ற பொழுது
வாரார்கள் துணையாக நீராளமாய் உருகி
வந்திடுவர் போல அழுவர்
வந்தாலும் நடையற்ற பிணமோடு கூடியே
மயானவரை வந்ததாலோ
தராளமாக நான் அவர்கள் உறவு என்பதும்
சதாகாலம் என்னை அவர்கள்
சார்வாக எண்ணினதும் இப்படி முடிந்ததால்
சரண்உனை அன்றி உளதோ?........"

(133- குரு வணக்கம்-85).

(கடிகை = நேரம், சந்தம் = எப்போதும், தனு = உடல், நீராளம் = கண்ணீர்மிகுதி, சார்வாக = துணையாக)

2. "............நீதான் ஒருத்தன் இன்றிப்
பாங்கான தந்தை இலை நீங்காத அண்ணன் இலை
பார்க்கில் உறவு ஒன்று காணேன்........

(71- விஷ்ணு வணக்கம் - 42)

கருத்து: உற்றார், உறவினர் எனப்படுவோர், என்னை, அவர்களில் ஒருவனாகக் காட்டிக் கொள்கிறார்கள். ஆனால் உண்மையாகவே எனக்கு உதவி தேவையாகும் போது, அவர்களது துணை கிட்டுவதில்லை. தந்தையார், அண்ணன், போன்ற நெருக்கமான உறவுகளும் கூட இத்தகையவை ஆவதால், இறைவனைத் தவிர, உறவு என்பதே இல்லை. இந்த அறிவு, மனத்துன்பம் தருவதாகும்.

VI உலகம் மற்றும் காண்பனவற்றால் துன்பம்:

1. "உன்னைக் கதிஎன்று அடையாமல்
ஒகோ உலக வாஞ்சையினால்
என்னே, இற்றை நாள்வரைக்கும்
இழிவாம் தொழிற்கே இழுத்தல் கண்டாய்

பின்னை எனக்கோர் கதிஇல்லை

பேசாது இருந்தால் என்செய்வேன்............"

(66- இறை வணக்கம் - 36)

2. "பன்னாளும் காண்பவற்றைப் பற்றிப் படும் துயரம் என்னால் இனிச்சகிக்க ஏலாதே நெஞ்சகமே"

(61- நெஞ்சோடு இரங்கல் -124)

**கருத்து:** உலகியலும், காண்பனவும் பற்று வடிவமாகும். இவை அனுபவித்தற்கான செயல்களில் (காம்ய கர்மா) இழுத்து, துன்பம் தருகின்றன. இவற்றின் முன்னே, நான் இயலாதவனாகிறேன்.

**VII திருவாக்கிய உபதேசம்:**

1. "சரீரம் முதலான பிரபஞ்சம் காலத்தில் உட்பட்ட படியினாலே அதனிடத்து வாரா நின்ற உயர்வு, தாழ்வு, வருத்தங்களுக்குப் பிரமாணம் இல்லை." (62)
2. "எல்லாம் உன்னுடைய செயலே ஆனால், கொடுத்தது யார்; வாங்கினது யார்?" (32)
3. "எல்லாம் சிவன் செயலதான்" (26)
4. "பாசபந்தம் வரும்போது, பாச நிவர்த்தியும் தோன்ற வேண்டும்" (09)
5. "பிரபஞ்சத்தில் விவேகத்தினாலே குணத்தைப் பொருளாய்க் கொள்ளாமல், குற்றமே காண வேண்டும்" (63)
6. "சகல சாத்திர விசாரம் பண்ணின ஞானிகளுக்கு, யான் எனது என்னப், போகத்தில் ஆபாசப் பிரவிர்த்தி வருகிறதற்குக் காரணம், பிரபஞ்சம் சத்யம் என்னும் பிரமாண புத்தியேயாம்." (79)
7. "திருசியம், திருக்குவை அன்றித் தோன்றாது". (19)
8. "உபசாந்தத்தில் காண்பான் காட்சி இல்லை". (41)

**பிற்குறிப்பு:** உலகியல் துன்ப (விரத்தி) நிலையை 'வியவகாரம்' என அத்வைதம் கூறுகிறது. வியவகார இரட்டைகளைத் (துவைதம்) பெரிதுபடுத்துவதாலேயே துன்பம் உண்டாகிறது. அனைவரும் உய்வுறுதல் வேண்டும் எனும் நற்கருணையால், தொடக்க நிலையில் உலகியலை ஏற்றுக் கொண்டு, பின்னர், இரட்டைகளற்ற நடுநிலையே உயர்ந்தது எனவும், உலகியல் என்பது தோற்றம் மட்டுமே எனவும் உறுதி செய்யப்படும். உலகியலைப் பகுத்தறிபவர் 'விவேகம்' பெறுகிறார். இதுபற்றி இனிக் காண்போம்.

*(தொடரும்...)*

## ஞான வாசிட்டக் கதைகளும் தத்துவமும் (தொடர்ச்சி)

(சாது மெய்யப்ப ராமசுவாமி, கோவிலூர் மடாலயம்)

### IV திதிப்பிரகரணம் :

இந்த இதழில் நாளாவது பிரகரணம் தொடங்குகிறது. இதற்கு முந்தைய இதழ்களில், நம் மனமே உலகியல் காரணமெனவும், மனற்றுப் போனால் உலகியல் என்பதே இல்லை எனவும் உறுதி செய்யப்பட்டது. தற்போது, மனம் மற்றும் உலகியல் என்பனவெல்லாம் ஆன்மாவில் உள்ளன ; ஆன்மாவே பிரம்மம், பிரம்மமே இவையனைத்துமாக உருவெடுத்துள்ளது எனும் நிலைப்பாட்டிற்குத் தேவையானவை பற்றிக் கூறப்படும். இதனை, தன்னில் நிலைபெறுவதற்கு (ஸ்திதி) தேவையான விளக்கம் எனலாம். திதிப்பிரகரணத்தில் ஐந்து கதைகளும் இதோபதேசமும் உண்டு. இதில் முதலாவது சுக்கிரன் கதை.

### IV/01/13 : சுக்கிரன்கதை :

( முற்குறிப்பு : தானவர் (அசுரர்) குருவான சுக்கிராச்சார்யர் பற்றிய பல கதைகள் உண்டு. இக்குரு, அளவற்ற ஆற்றல்கள் உடையவர். தானவர்கள், வானவரை வெற்றிகொண்டதாகச் சொல்லப்படும் கதைகளின் பின்புலத்தில் சுக்கிராச்சார்யரின் அருள் எப்போதும் உண்டு. ஆனால், இவர் குரு ஆகுதற்கு மிகவும் முன்னர், சிறுவனாக இருந்த காலத்தே, நடந்ததாக இக்கதை அமைந்துள்ளது.

நாம் இதற்கு முன்னர் படித்த லீலை - மண்டபக்கதை போன்றே, இதுவும் ஒரு கூடு விட்டுக் கூடு பாயும் கதை. இதில், ஒரே உயிரானது, பார்கவன் எனும் பெயருடைய முதல் உடலாகவும், பற்பல பிறப்புகளின் பின்னர் வாசுதேவன் எனும் பெயருடைய வேறு உடலாகவும், முடிவாக, அதே உயிர், வாசுதேவ உடல் விட்டு முதல் உடலான பார்கவ உடலில் புகுந்து சுக்கிராச்சார்யராக எழுந்ததாகவும் கூறப்படுகிறது.

இக்கதைக்கு பார்கவன் கதை, வெள்ளி கதை எனும் வேறு பெயர்களும் உண்டு.)

கதைப் பகுதி :

"முன்னம் ஒருநாள் பிருகுமுனி முதுமந்தரமால் வரைச்சாரல்
மன்னுதவம் செய்யுழிஅ வன்தன்மைந்தன் மதிமான்
மதியனையோன்
தன்னதாதை கழல்பிரியான் தனிமெய்ஞ்ஞானம் அஞ்ஞானம்
என்னும் இருபார்வை யின்நடுவே இயங்காநின்ற
பெரும்பதத்தோன்,"

என இக்கதை தொடங்குகிறது. பிருகு, மிகப் பெரிய தவசீலர். அவர் பெரும்பாலும் சமாதி நிலையிலியே இருந்ததால், அவருக்கு உதவியாக, அவர் மகன் பார்கவனும் மந்திர மலைச் சாரலில் இருந்தான். பார்கவன், நற்குணங்களும் காளைப்பருவமும் கூடியவன். ஒருமுறை, பிருகு முனிவர் நீள் சமாதியில் ஆழ்ந்தார். பார்கவன் தனிமையுற்றான். நேரம் போக்குவதற்காக அவன் மனகற்பனை வயப்பட்டான். அப்போது விச்சுவாசி எனும் வானவப் பெண் (தேவதை) வானத்தில் சென்றதைக் கண்டான். பார்கவன் மனமும் அவள் பின்னே சென்றது. விச்சுவாசி, இந்திர உலகு அடைந்தாளெனத் தெரிந்துகொண்ட பார்கவன், இந்திர உலகு பற்றிய கற்பனை வயப் பட்டான் ; தானும் இந்திர உலகில் இருக்க வேண்டுமென விரும்பினான்.

முனிவர் மகனும், நற்குணங்களுமுடைய பார்கவனது எண்ணவலுவுக்கு (சங்கற்பம்) ஏற்ப, தந்தை பிருகு வினருகே உடலை விடுத்த பார்கவனின் உயிர் மட்டும் இந்திர உலகு சென்றது. அவன் இந்திரனால் வரவேற்கப்பட்டான். இந்திர உலகெங்கும் ஆவலோடு சுற்றி வந்தபோது விச்சுவாசியையும் கண்டு காமுற்றான். இருவரும் பேசியும் கூடியும் மகிழ்ந்தனர். இவ்வாறு பற்பல ஆண்டுகள் வாழ்ந்தான்.

"நல்நாளாகச் சதுரியுகம் நாலுநாலு நடந்ததற்பின்
முன்நாம்புரிந்த தருமம்எலாம் முடியும்முடியும் எனுங்கருத்தால்,"

அவனது நல்வினைப் பயன்கள் (புண்ணியம்) தீர்ந்து போயிற்று. அவன் உயிர் மறுபடி புவியில் விழுந்து, பனியுடன் சேர்ந்து, நீராகி, நெல்லாகி, ஒரு மறையவனின் உணவாகி, அம் மறையவனின்

மகனாகப் பிறந்தான். தற்போது வேறு உடல் எடுத்துள்ள இம்மகன், முன்வாசனை காரணமாக ஓர் தவசீலனாகினான். ஆனால்,

**"பொன்னார் வரை சூழ் வனத்திடையே புரிந்தான் அவன் அங்கு ஓர் பெடைமான்**
**தன்னால் ஒருசேய் நரவடிவாய்ச் சாதன் ஆனான் அவன்பால்**
**பின்னா நின்ற பேதமையால் பேரா உண்மை நிலைபெயர்ந்தான்."**

(பெடை = பெண், சாதன் = பற்றுடையவன்).

அம்முனிவன் மகன் மீது கொண்ட பாசத்தால், தவநிலை பிறழ்ந்தான். இதனால், பற்பல பிறவிகளை அடைந்து, இறுதியாக மற்றொரு முனிவரது மகனானான். அவன் பெயர் வாசுதேவன். வாசுதேவன் பெரியவனாகிய பின் ஓர் முனிவனும் ஆகினான்.

இவ்வாறு, பார்கவனில் தொடங்கி, பல நூற்றாண்டுகளும், பற்பல பிறவிகளும் கடந்துபோன பின்னர், அதே உயிர், வாசுதேவனாயிற்று.

மந்திர மலையில், சமாதி நீங்கிய பிருகு முனிவர் இருகண் மலர்ந்தார். அவரது சமாதி நிலை நீங்க எத்தனை காலமாயிற்று என அவர் கருதவில்லை. அவரருகே பார்கவன் இல்லை, ஆனால், எதிரே ஓர் எலும்புக் கூடு மட்டும் கிடந்தது. அது பார்கவனுடையதே எனப் புரிந்து கொண்ட பிருகு, எமன் மீது வெகுண்டார்.

**"அடைத்தகாலத்தன்றி எனதரிய மகவை அகாலத்தில்**
**துடைத்த காலன்தனைக் கணத்தில் துடைப்பனென்னா விடைப்பாகன்**
**விடைத்தவாபோல் பிருகுமுனி வெகுண்டு சாபமிட நினைப்பக்**
**கிடைத்தகாலன் நடுநடுங்கிக் கிளர் ஐம்பூத வடிவெடுத்து."**

(அடைத்த = விதிப்படியான, கிடைத்த = தெரிந்துகொண்ட)

பிருகு முனிவரெதிரே வந்து, அவரை எமன் வணங்கினார்.

**"குடும்பவலையில் பிணிப்புண்ட கோடாகோடி உருத்திரரும்**
**நெடும்பங்கயக் கண்மாதவரும் நிலையாம் என்னால் தொலைவுற்றார்**

**இடும்பை உலகில் எனைக்கடந்தார் இல்லையாரும் எனக்கு இரையாம்**
**படும்பல் உயிரும்யாம் படுத்தல்பகுதி பாயபழுநியதி,"**

என முனிவரிடம் கூறிய எமன், "நாங்கள் விதிக்கப்பட்ட நியதியை மட்டும் செய்வதால், ஊழிக் கனலும் கூட எம்மைச் சுடாது. ஆதலால், தாங்கள் நோற்றுப் பெற்ற அருந்தவத்தை, சினமெனும் அற்பத் தீயால் பொசுக்கிவிட வேண்டாம்" எனவும் வேண்டினார். மேலும், பிருகு முனிவருக்கு எமன் தத்துவ உபதேசமும் செய்தார். (இது, தத்துவப் பகுதியில் வரும்) பிருகு முனிவர் சமாதி நிலையிலிருந்த போது, பார்கவன் காதல் வயப்பட்டு அதனால் புண்ணியப் பலன்களை இழந்ததையும், பூமியில் விழுந்து, மறையவர் மகன், சிற்றரசன், வேடன், அன்னம், பேரரசன், சிற்பி, தலைமைப் புலவன், முனிவன், குழந்தை, படைத் தலைவன், சைவதேசிகன், மூங்கில் புதர், பாம்பு போன்ற பிறவிகளின் பின்னர், தற்போது வாசுதேவ முனிவனாக கங்கைக் கரையில் தவத்தில் உள்ளான் எனவும் எமன் கூறினார். பிருகு முனிவர்

**"முழுதுணர் தருமநீதி முதல்வநீ காலம்மூன்றும்**
**பழுதறத் தெரிதிநீயே பாலராய்ப் பரமஞானம்**
**எழுதலில் இளையாராகும் எம்மனோர்......"**

என எமனைப் போற்றி, தம் தவற்றிற்கு வருந்தினார். எமன், பிருகு முனிவரைக் கங்கைக் கரையிலுள்ள வாசுதேவனிடம் கூட்டிச் சென்றார். எமனின் அருளால் இருவரையும் கண்ட வாசுதேவன் அவர்களைப் பணிந்து நின்றான். மேலும்,

**"தேசுஉடை உமது நல்ல தெரிசனப் பேற்றினாலே**
**மாசறு தவத்தால் நூலால் மகங்களால் தனத்தால்போகா**
**ஏசுறு மோகம் தீர்ந்தேன்....................."**

(தேசு = ஒளிர்வு, மகம் = வேள்வி, ஏசுறு = இகழ்ச்சியுடைய) எனவும், அமுதம் கூட இத்தகைய ஆனந்தம் தராது எனவும் போற்றினான்.

பிருகு முனிவர், வாசுதேவனை வாழ்த்தி, அவனது முற்பிறவிகளை அவனே அறியுமாறு செய்தார் வாசுதேவனும்,

“..........................மிகுதி மோகம்
கோத்த ஞாலங்களாகிக் கோர என் மனத்தினூடே
ஆத்தமாய் வளரா நின்றது அகோஅகோ ஈது ஒன்று என்னே”
(கோத்த = ஆக்கிய தோற்றம், ஆத்தம் = சரிவர) என வியந்தான். மேலும்,

“கற்பன அனைத்தும் கற்றேன் காண்பன அனைத்தும் கண்டேன்
உற்பவத்து அநேககாலம் உழன்ற வெந்துயரும் தீர்ந்தேன்
நற்பயன் அறிவைப் பெற்றேன்..........”

(உற்பவம் = பிறப்பு) என இருவரையும் போற்றினான்.

மூவரும் மந்திரமலை சென்றனர். வாசுதேவன், பார்கவனது எலும்புக் கூட்டைக் கண்டு, பிருகு முனிவரிடம்,

“இந்த வன் கங்காளம் கொல் ஈன்று நீ வளர்த்தது” எனவும்,
“அருந்தவப் பயனால் இந்த அற்புதம் கண்டேன்” எனவும் கூறினான்.

எமன், வாசுதேவனை,

“பொருந்திய உடலின் மன்னர் புரிபுகும் அதுபோல் புக்குத்
திருந்திய அசுரர்க்கு எல்லாம் தேசிகச் செய்கை செய்வாய்,”

(பொருந்திய: முன்னதாக உள்ள (பார்கவன் உடல்) மன்னர் புரிபுகல் = தன் நகரம் திரும்புதல், அசுரர் தேசிகர் = சுக்கிராச்சாரியர்)
என வாழ்த்தியபின், அவ்இடம் விட்டு நீங்கினார். வாசுதேவனும், பார்கவ உடலிற் புகுந்து, சுக்கிரனாக எழுந்தான். அதன் பின்னர்,

“பிருகுவும் மைந்தன் தானும் பிறங்கு மந்தரத்தில் கானில்
திருசிய சித்தம் என்னும் தீப்பகை தீரமாற்றி
வருதிரை இலாத நீர்போல் மாசறு நிலையில் வாழ்ந்தார்
கருணை மாமுகிலே என்று கற்றுணர் வசிட்டன் சொன்னான்,”

என்பதாக இக்கதை முடிவுறுகிறது.

(இக்கதைக்கான தத்துவப்பகுதி, அடுத்த இதழில் தொடரும்)

*(தொடரும்...)*

# கோவிலூர் ஆதீனத்தில் ஆவணப் பெருவிழா

அய்க்கண்

கோவிலூரில் 19.5.2015 அன்று மாலை, வரலாற்றுச் சிறப்பு மிக்க விழா (வழக்கமாக, மேடைகளில் சொல்கின்ற 'வரலாற்றுச் சிறப்பு' அல்ல : உண்மையிலேயே, நகரத்தார் வரலாறு தொடர்பான சிறப்பு விழா). கோவிலூர் ஆதீனகர்த்தர் சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் அவர்கள் தலைமையில் நடைபெற்றது.

இந்திய உச்சநீதிமன்ற முன்னாள் நீதியரசர் மாண்பமை டாக்டர் அரு. லெட்சுமணன் அவர்கள், கலாக்ஷேத்ரா பதிப்பகத்தின் சார்பில் பதிப்பிக்கப்பட்ட 'நகரத்தார் அறப்பட்டயங்கள்', 'பழநித் தேசிகர் குடும்பத்திற்கு நகரத்தாரின் தர்ம சாசன அறப்பட்டயங்கள்' ஆகிய நூல்களையும், 'பழனி தைப்பூசமும் நகரத்தார் காவடிகளும்' என்ற ஆவணப்படத்தின் குறுந்தகட்டினையும் வெளியிட்டார்கள்.

(அன்று தேவகோட்டையில் நீதியரசர் அவர்கள் நிறுவியுள்ள ஸ்ரீசாய் பாபா திருக்கோயிலில் தங்கத்தேர் உலா நடைபெறும் நாளிலும், அவர்கள் இந்த விழாவுக்கு வருகை தந்து சிறப்பித்தது, விழாவின் முக்கியத்துவத்தை எடுத்துக்காட்டுவதாகும்.)

காப்பியக் கவிஞர், பொற்கிழிக் கவிஞர் திரு. மீனவன் அவர்கள், விழாவுக்கு வந்திருந்த அனைவரையும் வரவேற்று உரை நிகழ்த்தினார்.

கோவிலூர் முந்தைய ஆதீனகர்த்தர் சீர் வளர் சீர் நாச்சியப்ப ஞான தேசிக சுவாமிகள் அவர்களின் திருவடி வழியை ஒற்றி, நம் சீர் வளர் சீர் மெய்யப்ப ஞானதேசிக சுவாமிகள் அவர்களும், திருமட வளாகத்தையே கல்லூரிகள், உயர்கல்விக் கூடங்கள், இளைய கல்வி நிலையங்கள், நுண்கலைப் பயிற்சி மையங்கள் நிறைந்ததாக வளர்த்து வருவதோடு, செட்டிநாட்டுப் பாரம்பரியப் பொருள்கள், ஆவணங்கள், சின்னங்கள் ஆகியவற்றின் கண்காட்சி சாலையையும் உருவாக்கி வரும் ஒப்பற்ற பணி யாவரும் அறிந்ததே.

ஆதீனகர்த்தர் சுவாமிகள் அவர்கள், தம் ஆசியுரையில்,

"ஏறத்தாழ நானூறு ஆண்டுகளுக்கு முன்பு தொடங்கி நடந்து வரும் பழனிப் பாதயாத்திரை தொடர்பான ஓலைச் சுவடிகளை, நெற்குப்பை கு.பழ.சு.பழ. குடும்பத்தாரிடமிருந்தும், பழனி தெய்வ நாயகப் பண்டாரத்தின் மரபினரிடமிருந்தும் பெற்று, அவற்றை ஓலைச் சுவடிகள், கல்வெட்டுகள் துறையில் வல்லுநரான திரு. பெருமாள் அவர்கள் வரிசைப்படுத்தித் தூய்மை செய்து, மைக்ரோ ஃபிலிம் எடுத்து, அதனுடைய காலவரையறை, மெய்ம்மைத்தன்மை பற்றி ஆராய்ந்த பிறகு, கல்வெட்டுகளும் ஓலைச் சுவடிகளும் படிப்பது பற்றிய துறையில் வல்லுநர் பேராசிரியை முனைவர் நா. வள்ளியம்மை அவர்களைக் கொண்டு உரைநடை நூலாக எழுதி அச்சேற்றப்பட்டுள்ளன. இதனுடைய முந்தையப் பதிப்புகளைத் தமிழ்ப்பேரறிஞர்களான தேவகோட்டை பாலகவி வே. இராமநாதன் அவர்கள், முனைவர் வ.சுப. மாணிக்கம் அவர்கள், முனைவர் தமிழண்ணல் அவர்கள், முனைவர் லெ.ப.கரு. இராமநாதன் அவர்கள், நெற்குப்பை கு.பழ.சு.பழ.சுப. பழநியப்ப செட்டியார் அவர்கள் ஆகியோர் பாராட்டி உரை வழங்கியிருக்கிறார்கள் என்பது குறிப்பிடத்தக்கது. இந்த நூல் மூலம், நகரத்தார் இறையன்பை, முருக பக்தியை, பண்பாட்டை, கலாச்சாரத்தை மரபு வழுவாப் பண்பை, வளரும் தலைமுறையினருக்கும் தெரிவிக்க வேண்டும் என்ற உந்துதலால் இந்த மூன்றாம் பதிப்பை வெளியிடுகிறோம். நகரத்தார்கள் இதனைப் படித்து நம்முடைய அரிய பண்புகளில் ஈடுபட்டு, உண்மை, நாணயம், மரபு வழி வாழ்தல், இயன்ற வரை அறம் இயற்றல் போன்றவற்றைத் தெரிந்து கொள்ளவேண்டும் என்று அருளுரை வழங்கினார்கள்.

இந்தப் பாரம்பரிய ஆவணங்களை வெளியிடுவதற்கு, மேன்மை மிகு நீதியரசர் டாக்டர் அரு. லெட்சுமணன் அவர்கள், மிகவும் பொருத்தம் வாய்ந்தவர் எனலாம். நமது வட்டாரத்திற்கே பெருமை சேர்க்கும் வகையில், டில்லி உச்சநீதி மன்றத்தின் புகழ்பெற்ற நீதியரசராகவும், ஏறத்தாழ 50 ஆண்டுகளுக்குப் பிறகு, நடுவண் அரசின் தேசியச் சட்ட ஆணையத்தின் தலைமைப் பொறுப்பேற்ற இரண்டாவது தமிழராகவும் வரலாற்றுப் பெருமை பெற்ற பெருமகனார் அவர்கள். நூல்களை வெளியிட்டு, "கடல் பயணங்கள் பாதுகாப்பில்லாத

சிறு கப்பல்கள் வழியாக நடந்த பழங்காலத்திலேயே, நகரத்தார்கள் துணிவுடன் கடல் கடந்து பல வெளிநாடுகளுக்குச் சென்று, வணிகத்தையும் பண்பாட்டையும் நாகரிகத்தையும் பரப்பிய சமுதாயத்தார் என்று இந்தியப் பிரதமர் - மனிதருள் மாணிக்கம் - ஜவகர்லால் நேரு அவர்கள், தாம் எழுதிய 'டிஸ்கவரி ஆஃப் இந்தியா' என்ற ஆங்கில உலகவரலாற்று நூலில், மூன்று பக்கங்களுக்கு மேல் சிறப்பாகக் குறிப்பிட்டுப் பாராட்டியுள்ளார். அத்தகைய பாரம்பரியச் சிறப்புமிக்க நகரத்தாரின் பழைய வரலாறும், ஆன்மீகத் தொண்டுகளும் முருகவழிபாடும், கடந்த நானூறு ஆண்டுகளுக்கு முன்னரே இருந்த கல்வெட்டுகளிலும் ஓலைச்சுவடிகளிலும் உண்மையான சான்றுகளோடு, நடுநிலையாகப் பாரபட்சமில்லாமலும் பதிவு செய்யப்பட்டுள்ளன. இவை எல்லாவற்றையும் முன்பாகவே நான் பார்வையிட்டு உறுதி செய்து கொண்ட பிறகே இவற்றை இங்கே வெளியிடுகின்றேன். உச்சநீதிமன்ற நீதியரசர் என்ற முறையில் என்னால் சான்றளிக்கப்பட்டு வெளியாகும் இந்நூல்களின் உறுதிப்பாட்டுக்கு அப்பீல் இருக்க முடியாது" என்று குறிப்பிட்ட நீதியரசர் "பழநிப் பாதயாத்திரை குறித்த ஆவணப்படத்தைப் பார்த்தபிறகு, இந்தப்படமும் தகவல்களும், இன்றையத் தலைமுறைக்கும் எதிர் காலத்தவர்க்கும் சென்று சேர வேண்டும். அவர்களும் இதைப்பின்பற்றி நடக்க வேண்டும் என்று விரும்புகிறேன். இதுபோன்ற பழம்பெரும் ஆவணங்களையும், ஆன்மீகம், நாகரிகம், பண்பாடு, இலக்கியம் தொடர்பான நூல்களையும் கோவிலூர் ஆதீனம் தொடர்ந்து வெளியிட வேண்டும். இப்படிப்பட்ட நூல்களை, அடுத்த தலைமுறையினர் படித்து உணரும்போது, இவற்றின் மேம்பட்ட சிறப்பும் செல்வாக்கும், இனிமேல் ஏற்படவிருக்கும் சமுதாயச் சிக்கல்களுக்குச் சரியான தீர்வாகவும் வழிகாட்டியாகவும் அமையும் என்று நம்புகிறேன்" என்று நீதியரசர் கூறிய பொன்னான வாக்கு, நிச்சயமாகச் சமுதாயத்தினரின் உள்ளங்களில் அழுத்தமாகப் பதியும் என்பது உறுதி எனலாம்.

உச்சநீதிமன்ற மாண்பமை நீதியரசராகவும், தேசியச் சட்ட ஆணைத்தலைவராகவும் முல்லைப் பெரியாறு அணைக்குழுத் தலைவராகவும் பணியாற்றி ஓய்வுபெற்ற பிறகும், நடைமுறை

வாழ்க்கையில் ஓய்வு பெறாமல், தொடர்ந்து ஆன்மீக, சமுதாயப் பணிகளில், தம்மை ஓய்வு இல்லாமல் ஈடுபடுத்திக் கொண்டு தம் அறிவையும் திறனையும் உழைப்பையும் பயன்படுத்தி வருவது, ஆன்மீகச் செம்மல் மாண்பமை அரு. லெட்சுமணன் அவர்களின் தலையாய சான்றாண்மைக்குத் தகுந்த சான்றாக இலங்குகின்றன. அண்மையில், இராமேஸ்வரம் நகரத்தார் விடுதியை அழகும் கம்பீரமும் துலங்கும் கட்டடமாக உருவாக்கியிருப்பதோடு, சுவாமி மலை நகர விடுதிக் குழுத் தலைவராகவும், புதுகை அப்பர் அரங்கக் கட்டடக் குழுத் தலைவராகவும் பொறுப்பேற்றுச் சிறப்பான ஆன்மீகப் பணியாற்றும் அவரது பெருந்தகைமை பாராட்டுதலுக்கும் போற்றுதலுக்கும் உரியது.

வாழ்த்துரை வழங்கிய நகைச்சுவைப் பேரரசர் - தேவகோட்டை கம்பன் கழகத் தலைவர் - பேராசிரியர் முனைவர் கண. சிற்சபேசன் அவர்கள் கோவிலூர்த் திருமடம் செய்து வரும் ஆன்மீக, கல்வி, இலக்கியப் பணிகளைப் பாராட்டி, நகரத்தார் தம் தெய்வமான திருமுருகனை வழிபடுவதற்கு மேற்கொள்ளும் பழனிப்பாத யாத்திரை பற்றிய ஆவணப்படத்தையும், அது குறித்த அறப்பட்டயங்களின் நூல்களையும் வெளியிடும் தொண்டின் சிறப்பையும் எடுத்துரைத்தார். ஒரு லட்சத்திற்கு மேற்பட்ட வழக்குகளில் சீரிய தீர்ப்புகளை வழங்கியுள்ள நீதியரசர் அவர்கள், தமிழிலும் ஆங்கிலத்திலும் 12க்கு மேற்பட்ட நூல்களைப் படைத்துள்ள இலக்கியத்திறன் வாய்ந்த எழுத்தாளராதலால், நூல்களையும் ஆவணங்களையும் வெளியிடப் பெரிதும் தகுதியுடையவர் என்று பாராட்டி அவருடைய பல்துறைத் திறன்களைப் போற்றி உரையாற்றினார்.

அடுத்து உரையாற்றிய எளியேன், இந்தியாவிலே உள்ள எத்தனையோ பணக்காரச் சமுதாயத்தார்களையும் விட, நகரத்தார் சமுதாயம் ஆன்மீகம், கல்வி, சமுதாயத் தொண்டுகளுக்காக அதிகமான நன்கொடை வழங்கி வரும் வரலாற்றுச் சான்றைக் குறிப்பிட்டு, 'செல்வத்தின் பயனே ஈதல்' என்று இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் நக்கீரன் சொன்னதற்கேற்ப, செல்வம் திரட்டத் தொடங்கும் போதே, தர்ம காரியத்திற்கென்று ஒரு குறிப்பிட்ட சதவீதத்தை ஒதுக்கி

நன்கொடை வழங்கும் மரபினர் என்பதாலேயே வரலாற்றுச் சிறப்பு மிக்கு உயர்ந்து வருகின்றனர் என்று குறிப்பிட்டு,

'தென்புலத்தார், தெய்வம்விருந்து, ஒக்கல்தான் என்றாங்கு
ஐம்புலத்தாறு ஓம்பல் தலை

என்னும் குறள் நெறிப்படி, முன்னோர்களை நினைந்து போற்றி வழிபட்டுப் படைப்புகள், தெய்வப் பணிகள், விருந்தோம்பல், உறவினரைப் பேணுதல், தன் வாழ்க்கைச் செம்மை என்னும் உயர் பண்புகளைக் கடைப்பிடிக்கும் தலையான மரபினர் என்று வாழ்த்தி உரையாற்றினேன்.

கல்வெட்டுத்துறை, ஏட்டுச் சுவடித்துறைக் கலைஞரும், காரைக்குடி இராமசாமி தமிழ்க்கல்லூரி முன்னாள் முதல்வருமான பேராசிரியை முனைவர் நா. வள்ளியம்மை அவர்கள், நகரத்தார் அறக்கட்டளை, தர்மசாசன அறப்பட்டயங்கள் ஆகியவற்றில் கூறப்பட்டுள்ள செய்திகள், வரலாற்று ஆவணங்களாகப் போற்றத்தக்கவை என்பதைக் கூறி அவற்றை விரிவாக எடுத்துரைத்தார்.

தஞ்சை சரபோஜி நூலக ஓலைச் சுவடிக் காப்பக வல்லுநர் திரு. பெருமாள் அவர்கள், ஓலைச்சுவடிகள், கல்வெட்டுகளின் காலங்களை உறுதி செய்வதில் திறனும் தகுதியும் அனுபவமும் நிறைந்தவர். ஓலைச்சுவடிகளை ஆண்டுதோறும் பிரித்துப் பின்னர் சேர்த்து வைப்பது அவசியம் என்பதற்குத்தான், ஆண்டுதோறும் கலைமகள் பூஜையன்று, பழைய ஓலைச் சுவடிகளையும் புத்தகங்களையும் பிரித்து வைத்துத் தூய்மை செய்து விரித்துப் படித்துச் சேர்த்துக் கட்டுவதை வழக்கமாகக் கொண்டிருந்தனர் என்று சுவையான செய்தியைத் தெரிவித்தார்.

இன்று கோவிலூர் ஆதீனத்தில் சேர்த்து வைக்கப்பட்டுள்ள ஏடுகள், ஏறத்தாழ நானூறு ஆண்டுகட்கு முந்தியவை என்பது, அவற்றின் பழைமை, அமைப்பு, சொற்றொடர், நடை, எழுத்து முதலான சான்றுகளிலிருந்து உறுதிப்படுகின்றன எனத் தெரிவித்தார் அவ்வல்லுநர்.

பேராசிரியர் முனைவர் சே. குமரப்பன் அவர்கள் விழாவில்

பங்கேற்ற அனைவர்க்கும் நன்றி கூறி உரையாற்றினார். தமிழ்ப்பேராசிரியர் ம. கார்மேகம் அவர்கள் விழா நிகழ்ச்சிகளைத் தொகுத்து வழங்கினார்.

விழாவின் தொடக்க நிகழ்ச்சியாக, பழனியாத்திரைக் காவடி பற்றிய ஆவணப்படம் திரையிடப்பட்டது. சிறந்த ஒளிப்பதிவாளர்களால் படம் பிடிக்கப்பட்டு, புகழ்பெற்ற திரைப்படத் தொகுப்பாளர் திரு. பி. லெனின் அவர்களால் 'எடிட்' செய்யப்பட்டிருந்த அந்த ஆவணப்படம், கண்ணையும் கருத்தையும் கவரும் வகையில் அமைந்திருந்தது பாராட்டுக்குரியது. காவடிகள் புறப்படுவதிலிருந்து, சாமியாடிகளிடம் திருநீறு பெறுவது, வழிபாடு செய்வது, ஆங்காங்கே தங்கிப் பூஜை செய்வது, பழனி மலையை அடைவது வரை, பக்தர்களும் பெரியோர்களும் இளைஞர்களுமாய்ப் பங்குபெறும் காட்சிகள் சிறப்பாக அமைந்து, வருங்காலத் தலைமுறைக்குப் பயனுள்ள படமாகவும் பாடமாகவும் விளங்குகிறது என்பதில் ஐயமில்லை.

இவ்விழாவில் திருமடத்தின் அறங்காவல் குழு உறுப்பினர்கள், காரைக்குடி தொழில் வணிகக் கழகத் தலைவர் திரு. முத்து பழநியப்பன் அவர்கள், நெற்குப்பை குமரப்ப செட்டியாரின் மரபினர்கள், பழனி தெய்வ நாயகப் பண்டாரத்தின் மரபினர், பல்வேறு கல்லூரிகளின் முதல்வர்கள், பேராசிரியர்கள், காரைக்குடி வட்டாரப் பெருமக்கள், திருமடத்தின் அலுவலர்கள், இறையன்பர்கள் ஆகியோர் பங்கேற்றுச் சிறப்பித்தார்கள்.

அறப்பட்டயங்கள், அவை எழுதப்பட்ட காலத்துப் பேச்சு நடையிலேயே இன்று அச்சிடப்பட்டிருப்பது மற்றொரு சிறப்பு எனலாம். நகரத்தார், தம் தொழிலில் 'மகமை' என்று பணம் ஒதுக்கி பரம்பரையாகத் தொழில் செய்து பெருக்குவது, நேமங்கோவில் குப்பா பிச்சஞ் செட்டிகுமரப்பன் என்பவர் நடத்திய உப்பு வாணிகம் வளர்ந்தது. அதில் 72 பணம் சேர்ந்ததும், பழனி முருகப் பெருமானையே ஒரு 'வணிக வேள்' ஆக்கி 'தாழ்விலாச் செல்வ' ராக்கிய நகரத்தார் பக்தி முதலான பல செய்திகளைத் தமிழ்ப்பேரறிஞர் தமிழண்ணல் சுவையாகப் பட்டியலிட்டுள்ளார்.

பழநிப் பாதயாத்தரையில் முதல் மரியாதை, இரண்டாம் மரியாதை, மூன்றாம் மரியாதை என்று யார் யாருக்கு வழங்கப்படுகிறது என்பதைக் காரணபூர்வமாகவும் வரலாறு சார்பாகவும் தெரிவிக்கிற செய்திகள், முதன் முதலில் பழநிக்குக் காவடி யாத்திரை மேற்கொண்டவர்கள், அவர்களுக்குத் துணையாகச் சென்றவர்கள், இன்று பழநியில் நடக்கும் மாபெரும் அன்னதானம், முதலில் தெய்வ நாயகப் பண்டாரத்தின் மனைவி பார்வதியம்மாள் மூலமாக ஐந்து பேர்களுடன் தொடங்கியது, முதலான பல செய்திகள் உண்மையில் மிகவும் சுவையான ஆர்வமும் ஈடுபாடும் கொள்ளத்தக்க வரலாறு என்பதை முழுமையாகப் படித்து உணர்ந்து சுவைத்தேன்.

இதேபோல் பல உண்மையான, எண்ணற்ற வரலாற்றுச் செய்திகள் இந்நூல்களில் விரவிக் கிடக்கின்றன. பொதுவாக, வரலாறு என்றாலே, படிக்கச் சுவையற்றதாக இருக்கும் என்றே எல்லோரும் எண்ணுவோம். வரலாற்றையும் ஒரு சுவையான இலக்கியமாகக் காப்பிய அழகுடன் கவிதை நடையில் எழுதிப் புகழ்பெற்ற எழுத்தாளன், ரோமாபுரிப் பேரரசின் வரலாற்றைப் பல பாகங்களாக ஆங்கிலத்தில் எழுதிய ராபர்ட் கிப்பன் (ROBERT GIBBON) என்பதை நாம் அறிவோம்.

அதுபோல, இந்த 'நகரத்தார் அறப்பட்டயங்கள், தர்ம சாசன அறப்பட்டயங்கள்' நூல்களையும், இன்றையக் கால உரைநடையில் எழுதச் செய்து வெளியிட்டால், நிச்சயம் எல்லோரும் இவற்றை வாங்கி ஆர்வத்துடனும் சுவையுணர்வோடும் படிப்பார்கள் என்று முழுமையாக நம்புகிறேன். வரலாறு என்பது நிகழ்வுகளின் வரிசை அல்ல : நினைவுகளின் உணர்வுத் துடிப்பு என்பதை எல்லோரும் ஏற்பர்.

விழா அன்று வெளியிடப்பெற்ற நூல்களையும் குறுந்தகட்டினையும் பலரும் மகிழ்வோடு வாங்கிச் சென்றார்கள். விழாவைக் காணும் பேறு பெறாத மற்றவர்களும், திருமடத்தோடு தொடர்பு கொண்டு, அவற்றை வாங்கித் தம் வீட்டில் வைத்திருப்பது, இல்லத்திற்கே நிரந்தர அணிகலன்களாக விளங்கும் என்று நம்புகிறேன்.

# எளிமைக்கு மறுபெயர் கலாம்

முனைவர் நா. வள்ளி

சீர் வளர் சீர் நாச்சியப்ப ஞானதேசிக சுவாமிகள் 12-ஆவது குருபீடமாகக் கோவிலூரில் வீற்றிருந்து அருளிய காலத்தில் சங்க இலக்கியங்களுக்குத் தக்க தமிழறிஞர்களைக் கொண்டு உரை எழுதச் செய்து, தலைநகர் டில்லியில் அப்போது ஜனாதிபதியாக இருந்த டாக்டர் APJ அப்துல்கலாம் அவர்களைக் கொண்டு வெளியிட்டார்கள். டில்லியில் நூல் வெளியீட்டு விழா நடந்தபோது நாச்சியப்ப சுவாமிகள், உரை எழுதிய தமிழறிஞர்களையும் உடன் அழைத்துச் சென்றார்கள். நாச்சியப்ப சுவாமிகளையும் தமிழறிஞர்களையும் அன்போடு ஜனாதிபதியவர்கள் உபசரித்து மகிழ, நாச்சியப்ப சுவாமிகளும், ஜனாதிபதியைக் கோவிலூர் மடாலயத்திற்கு வரும்படி அழைப்பு விடுத்தார்கள். வருவதாக ஒப்புக்கொண்ட கலாம் அவர்கள், நாச்சியப்ப சுவாமிகள் விடைபெற்றுப் புறப்படும்போது, வெண்மையான துணியொன்றில் பத்திரப்படுத்தி வைத்திருந்த தமிழ் ஓலைச்சுவடிக் கட்டொன்றை சுவாமிகளிடம் கொடுத்து அதிலுள்ள செய்திகளைத் தெரிந்து கொள்ள விரும்புவதாகச் சொல்லியுள்ளார்.

சுவாமிகளும் கோவிலூருக்குத் திரும்பியவுடன், கலாம் அவர்கள் கொடுத்த ஓலைச்சுவடியைப் படிக்கும் வாய்ப்பை எனக்குக் கொடுத்தார்கள். அது நாட்டுப்புறப் பாடல் வடிவில் அமைந்த 'வைகுண்ட அம்மானை' என்ற இலக்கியம்.

பிறகு, 2006-இல் அப்துல்கலாம் அவர்கள் கோவிலூர் ஆதீனத்திற்கும், காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழகத்திற்கும் வருகை தந்தார்கள். அழகப்பா பொறியியல் கல்லூரியின் முருகப்பா அரங்கில் கலாம் அவர்கள் மாணவர்களைச் சந்தித்து உரையாட அனைத்து ஏற்பாடுகளையும் அழகப்பா பல்கலைக்கழகம் செய்திருந்தது. அதற்கு முன்பாக, காலையில் கலாம் அவர்கள் கோவிலூருக்கு வந்திருந்தார்கள். கோவிலூருக்கு வந்தபோது எனக்கும் ஆதினத்திலிருந்து அழைப்பு வந்தது. மிக்க மகிழ்ச்சியோடு சென்றேன். மடாலயத்திற்கு வந்த ஜனாதிபதியவர்கள், நாச்சியப்ப சுவாமிகளோடு பிரம்ம சபைக்குச் சென்று, சுவாமிகளோடும், திருநெல்லை மாண்டிசோரி குழந்தைகளுடனும் அளவளாவி மகிழ்ந்து,

பிறகு மடத்திலுள்ள முன் மண்டபத்திற்கு வந்தார்கள். கோயில்சார்ந்த கலைகளை வளர்ப்பதற்காக நாச்சியப்ப சுவாமிகள் ஏற்படுத்திய பஞ்சலோக, சிற்ப, தவில், நாதசுரக் கல்லூரிகளில் பயின்ற மாணவர்களால் வடிக்கப்பட்ட தேர் மற்றும் மரச்சிற்பங்கள், கற்சிற்பங்கள் உலோகச் சிற்பங்கள் ஆகியவற்றைக் கண்டு மகிழ்ந்தார்கள். அங்கு வந்திருந்தவர்களை, நாச்சியப்ப சுவாமிகள் கலாமிற்கு அறிமுகம் செய்து வைத்தார்கள். எல்லோருக்கும் கலாம் அவர்களை அருகில் பார்த்ததில் மிக்க மகிழ்ச்சி.

ஜனாதிபதியவர்கள் கொடுத்தனுப்பிய ஓலைச்சுவடியைப் படித்தவர் என்று கூறி என்னையும் அறிமுகம் செய்து வைத்தார்கள். நான் அவரை வணங்க, 'அப்படியா சந்தோஷம்' என்று சொல்லி மலர்ந்த முகத்துடன் அவர்களும் பதிலுக்கு வணக்கம் சொன்னார்கள். 'பணியுமாம் என்றும் பெருமை' என்பதை நேரிடையாகக் கண்டேன். ஒரு மாமனிதரைச் சந்திக்கின்ற வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுத்த நாச்சியப்ப சுவாமிகளை நன்றியோடு நினைத்துப்பார்க்கின்றேன்.

பிறகு கலாம் அவர்கள் கோவிலூரில் தங்கி மடத்தின் ஆதரவோடு தவில், நாதசுரம், தேவாரம் பயிலும் பிள்ளைகளிடம் சென்று, அன்போடு உரையாடிக் கொண்டிருந்தார்கள். நாதசுரம் மற்றும் தவில் வாசிக்கின்ற பிள்ளைகள், 'சின்னஞ்சிறுகிளியே கண்ணம்மா' என்ற பாரதியாரின் பாடலை வாசித்துக் கொண்டிருந்தார்கள். அதை முழுவதும் கேட்டு ரசித்து மகிழ்ந்த அவர்கள் திடீரென்று, ஒழுங்குபடுத்துவதற்காகக் கட்டி வைத்திருந்த கயிற்றைத் தூக்கிக் குனிந்து சென்று நாதசுரம் வாசிக்கும் சிறுவர்கள் அருகில் நின்றுகொண்டு, அவர்களோடு சேர்ந்து நிழற்படம் எடுத்துக் கொண்டார்கள். பிள்ளைகள் அடைந்த மகிழ்ச்சியைச் சொல்லவும் வேண்டுமா?

இவற்றையெல்லாம் எதிரிலிருந்து பார்க்கின்ற வாய்ப்புக் கிடைத்த எனக்கு அவர் ஒரு ஜனாதிபதி, அணுவிஞ்ஞானி, மெய்ஞானி, கல்வியாளர், இலக்கியவாதி, கலாரசிகர் என்பதையெல்லாம் விட, குழந்தைகளை, மாணவர்களை, இளைஞர்களை நேசிக்கின்ற எத்தனை எத்தனை எளிமையான மாமனிதர் என்ற வியப்புத்தான் ஏற்பட்டது.

## இரங்கல் செய்தி

நம்முடைய திருக்களர் கோ.ஆ.வீர. திருமடத்தில் ஏறக்குறைய அறுபது ஆண்டுகள் நிலங்களுடைய விவசாய மணியக்காரராகவும் திருமடத்தின் மேலாளராகவும் பணிபுரிந்த திரு. பிச்சையாத் தேவர் அவர்கள் 29.07.2015 அன்று இயற்கை எய்தினார்கள். அவர்களுடைய பணிக்காலத்திலே திருமடத்தில் மிகச்சிறப்பாகவும் உண்மையாகவும் ஈடுபாடு கொண்டு பணியாற்றியவர்கள். தெய்வத்திரு. கிருஷ்ணானந்த சுவாமிகள் காலத்தில் இருந்து பணிபுரிந்தவர்.

நம்முடைய திருக்களர் திருமடத்தைப் பற்றியும் கிராமங்களைப் பற்றியும் முழுமையாக அறிந்தவர்கள். நம்முடைய சொத்துக்களை நல்ல முறையில் பாதுகாத்தவர்கள். அவர்களுடைய மறைவு நம்முடைய திருமடத்திற்கு நேர்ந்த பேரிழப்பாகும். அவர்களுடைய மனைவி மக்களுக்கு நம்முடைய ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம். அன்னாருடைய ஆன்மா சாந்தி அடையக் குருமுதல்வர் கோவிலூர் ஆண்டவரின் திருவடி சிந்தித்து அருள்புரிய வேண்டுகிறோம்.

நம்முடைய கோவிலூர் மடாலயத்திலும் காளையார்கோவில் மடாலயத்திலும் நாற்பது ஆண்டுகளுக்கும் மேலாகச் சேவை செய்து நம்முடைய மடத்தின் வளர்ச்சிக்குப் பேருதவியாக இருந்த திரு. அ.வெ. சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள் 04.08.2015 அன்று இயற்கை எய்தினார்கள். சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள் காளையார் கோவில் மடத்தின் நிர்வாகியாக நீண்ட காலம் உள்ளன்போடும் முழு ஈடுபாட்டோடும் செயல்பட்டார்கள். அன்னார் 92ஆவது வயதில் இயற்கை எய்தினார்கள். அவர்களுடைய ஆன்மா சாந்தி அடையக் குரு முதல்வர் கோவிலூர் ஆண்டவரின் திருவடி சிந்தித்து அருள்புரிய வேண்டுகிறோம்.

## விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்

– பதிப்பாசிரியர்

# நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி

(இருபாலாருக்கும்)

கோவிலூர் – காரைக்குடி – 630 307.

(அழகப்பா பல்கலைக் கழக இணைவு பெற்றது)

(அரசு அனுமதி பெற்றது)

தொலைபேசி : 04565 - 234 523 கைபேசி : 94434 42361

பயிற்றுவிக்கப் பெறும் பாடப் பிரிவுகள்:

B.A., English
B.A., Tamil
B.Sc., Computer Science
B.Com.,
B.Com. (C.A).,
B.B.A.,
B.Sc., Maths
B.Sc., Visual Communication

திரைக்கதை, வசனம் எழுதுதல்,
ஒளிப்பதிப்பு, ஒலிப்பதிவு , படத்தொகுப்பு,
இயக்கம், செய்தி தயாரித்தல், தொகுத்தல்
போன்ற பல துறைகளில் பயிற்சி பெற அரிய வாய்ப்பு !!

**B.Sc. Visual Communication.,**

(அழகப்பா பல்கலைக்கழகப் பகுதியில் முதன் முதலாகத் தொடங்கப்பட்டுள்ள வகுப்பு)

2015-16 ஆம் ஆண்டிற்கான மாணவர் சேர்க்கை நடைபெறுகிறது.

விண்ணப்பங்கள் கிடைக்குமிடம் : நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி
கோவிலூர் ஆண்டவர் மெட்ரிகுலேசன் பள்ளி
கோவிலூர்